

# அனுமார் அனுக்கிரஹிப்பார்

ஆஞ்ஜனேய ஸ்வாமியின் விசேஷமே அலாதியானது. அவர் பக்தர்களுக்கு என்னென்ன அனுக்கிரகம் செய்கிறார் என்பதைப் பார்த்தால், அவருக்கு என்ன விசேஷம் என்று தெரியும்.

*புத்திர் பலம் யசோ தைர்யம் நிர்பயத்வம் அரோகதா।*
*அஜாட்யம் வாக்படுத்வம் ச ஹனுமாத் ஸ்மரணாபவேத்॥*

ஆஞ்ஜனேயரை ஸ்மரிப்பவர்களுக்கு அவர் என்னென்ன அனுக்கிரகிக்கிறார் என்று இந்தச் சுலோகம் சொல்கிறது. புத்தி, பலம், புகழ், உறுதிப்பாடு, அஞ்சாநெஞ்சம், ஆரோக்கியம், விழிப்பு, வாக்குவன்மை இத்தனையும் தருகிறார் அவர்.

சாதாரணமாக இவையெல்லாம் ஒரே இடத்தில் அமையவே அமையாது. நல்ல புத்திமான் ஆரோக்கியம் இல்லாமல் சோனியாக இருப்பான். பெரிய பலசாலி மண்டுவாக இருப்பான். இரண்டும் இருந்தாலும் கோழையாக, பயந்தாங்கொள்ளியாக இருப்பான். எத்தனை திறமை இருந்தாலும், அவற்றைப் பிரயோகிக்கிற சுறுசுறுப்பு, விழிப்பு இல்லாமல் சோம்பேறியாக இருப்பான். பெரிய அறிவாளியாக இருந்தாலும் தனக்குத் தெரிந்ததை எடுத்துச் சொல்கிற வாக்குவன்மையில்லாமல் இருப்பான். இந்த மாதிரி ஏறுமாறான குணங்கள் இல்லாமல் எல்லா சிரேயஸ்களையும் ஒரே இடத்தில் பொழிகிறார் ஆஞ்ஜனேயர்.

இதற்குக் காரணம், சாதாரணமாக நாம் ஒரே இடத்தில் சேர்ந்து பார்க்காத குணங்கள், சக்திகள் அத்தனையும் அவரிடமே பூரணமாக ஒன்று சேர்ந்திருக்கின்றன. நாம் எதிரெதிர் குணங்கள் என்று நினைப்பவைகூட, அவரிடம் ஸ்வபாவமாகச் சேர்ந்திருக்கின்றன. உதாரணமாகப் பெரிய பலசாலிக்கு வினயம் இருக்காது; பெரிய புத்திசாலிக்கு அகங்காரமில்லாத பக்தி இராது. ஆஞ்ஜனேயரோ தேக பலம்,

புத்தி பலம் இவற்றைப்போலவே வினயம், பக்தி இவற்றிலும் முதலாக நிற்கிறார். மகா சக்திமானாக இருந்தும், அத்தனை சக்தியும் ராமன் போட்ட பிச்சை என்ற அடக்கத்தோடு தனக்கு ஒரு பதவியும் கேளாமல் ராமதாஸனாகவே இருந்தார். அப்படி அடிமையாக இருந்ததாலேயே நிறைந்து இருந்தார். பக்தி இருக் கிறவர்களுக்கேகூட அதில் ஞானத்தின் தெளிவு இல்லாமல் மூடபக்தியாகவோ, முரட்டுப் பக்தியாகவோ இருப்பதுண்டு. ஞானமும் பக்தியும் வேறு வேறு என்றே அவர்கள் சண்டை கூடப் போட்டுக் கொள்வார்கள். ஆஞ்ஜனேயரோ ராமச்சந்திர மூர்த்தியின் பரமபக்தராக இருக்கும்போதே, பரமஞானியாக வும் இருந்தார். எப்படித் தக்ஷிணாமூர்த்தி ஸனகாதி முனிவர் களை முன்னிட்டு உபதேசம் செய்கிறாரோ, அப்படியே ஸ்ரீ ராமன் ஆஞ்ஜனேய ஸ்வாமியை முன்னால் வைத்துக் கொண்டு ஞானோபதேசம் செய்கிறார் என்று 'வைதேஹீ ஸஹிதம்' சுலோகம் சொல்கிறது. அர்ஜுனனின் தேர்க்கொடி யில் இருந்து கொண்டு கீதோபதேசத்தை நேரிலேயே கேட்ட வர் அவர். பைசாச பாஷையில் கீதைக்குத் தத்துவ மயமான ஒரு பாஷ்யம் இருப்பதாக்வும், அது ஆஞ்ஜனேயர் செய்தது என்றும் சொல்வார்கள். ஒன்பது வியாகரணமும் தெரிந்த 'நவ வ்யாகரண வேத்தா' என்று ராமரே அவரைப் புகழ்கிற அளவுக்குப் பெரிய கல்விமான். ஆனாலும் புத்திப் பிரகாசம், சக்திப் பிரபாவம் எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டு பக்தியி லேயே பரமானந்தம் அனுபவிக்கிறார்.

பக்தி என்பதால் லோக காரியத்தைக் கவனிக்காதவர் அல்ல. மகாபௌருஷத்தோடு போராடி அபலைகளை ரக்ஷித்த வர்களில் அவருக்கு இணை இல்லை. லோக சேவைக்கு அவரே உதாரணம் (ideal).

ஞானத்தில் உச்சநிலை, பலத்தில் உச்சநிலை, பக்தியில் உச்சநிலை, வீரத்தில் உச்சநிலை, கீர்த்தியில் உச்சநிலை, சேவை யில் உச்சநிலை, வினயத்தில் உச்சநிலை – இப்படியெல்லாம் ஒன்று சேர்ந்திருக்கிற ஸ்வரூபம் ஒன்று உண்டு என்றால் அது ஆஞ்ஜனேய ஸ்வாமிதான்.

இதெல்லாவற்றுக்கும் மேலாக அவருடைய பிரம்மச்சரியத் தைச் சொல்ல வேண்டும். ஒரு க்ஷணம்கூடக் காமம் என்கிற நினைப்பே வராத மகா பரிசுத்த மூர்த்தி அவர். தனக்கென்று எதுவுமே நினைக்காதவர். ஒரு காம நினைவும் இல்லாமல்

ராமனுக்குச் சேவை செய்தே நிறைந்து விட்டார்.

அவரை நம் சீமையில் பொதுவாக 'ஹனுமார்' என்போம். கன்னடச் சீமையிலே அவரே 'ஹனுமந்தையா' சித்தூருக்கு வடக்கே போய்விட்டால் ஆந்திரா முழுவதும் 'ஆஞ்ஜனேயலு' என்பார்கள். மகாராஷ்டிரம் முழுக்க 'மாருதி, மாருதி' என்று கொண்டாடுவார்கள். அதற்கும் வடக்கில் 'மஹாவீர்' என்றே சொல்வார்கள்.

ஆஞ்ஜனேயருக்கு ஈடு கிடையாது. அவரை ஸ்மரித்த மாத்திரத்தில் தைரியம் வரும். ஞானம் வரும். காமம் நசித்து விடும். பரம வினயத்தோடு பகவத் கைங்கர்யம் செய்து கொண்டு எல்லோருக்கும் நல்லது செய்வோம்.

'ராம் ராம்' என்று எங்கெங்கே சொல்லிக் கொண்டிருந்தாலும், ரகுநாத கீர்த்தனம் எங்கே நடந்தாலும், அங்கெல்லாம் நம் கண்ணுக்குத் தெரியாமல் ஆஞ்ஜனேயர் தாரை தாரையாக ஆனந்த பாஷ்பம் கொட்டிக் கொண்டு நின்று கேட்கிறார்.

இந்தக் காலத்தில் நமக்கு மற்ற எல்லா அனுக்கிரஹங்களோடு, முக்கியமாக அடக்கமாக இருக்கிற பண்பு ரொம்பவும் அவசியப்படுகிறது. எத்தனை வந்தாலும் போதாமல் இப்போது, நாம் உயர உயரத் துள்ளிக் கொண்டேயிருக்கிறோம். இதனால் புதுப்புது அதிருப்திகளை, குறைகளைத்தான் உண்டாக்கிக்கொள்கிறோம். துள்ளாமல் அடங்கிக் கிடந்தால் தான் ஈச்வரப் பிரஸாதம் கிடைக்கும். அதுதான் நிறைந்த நிறைவு. அதை நமக்கு ஆஞ்சனேயர் அனுக்கிரகம் பண்ண வேணும்.

அவரைப் பிரார்த்திப்பவர்களுக்கு ஒரு குறையும் இல்லை. லோகம் முழுவதிலும் தர்மம் பரவியிருக்க அவரையே பிரார்த்தனை பண்ணுவோம். அவருடைய சகாயத்திலேயே ராவணாதிகள் தோற்று ராமராஜ்யம் ஏற்பட்டது. அர்ஜுனனின் தேர்க் கொடியில் அவர் இருந்த விசேஷத்தால் பிறகு தர்மராஜ்யம் ஏற்பட்டது. பிற்காலத்தில் நம் தர்மம், பக்தி எல்லாம் நசித்த போது ஆஞ்ஜனேய அவதாரமாக ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமி தோன்றித்தான் சிவாஜி மூலம் மறுபடி தர்ம ஸம்ஸ்தாபனம் செய்தார். இன்றும் சகல தேசங்களிலும் தர்மமும் பக்தியும் ஏற்பட அவர் அனுக்கிரஹம் வேணும். நாம் மனமுருகிப் பிரார்த்தித்தால் இந்த அனுக்கிரஹத்தைச் செய்வார்.

ஆஞ்ஜனேய ஸ்வாமின: ஜேய்!!

# குழந்தைசாமி



## கிழவியும் குழவியும்

கிழப்பாட்டி ஒருத்தி. பாட்டி என்றால் காலை நீட்டிக் கொண்டு இருந்த இடத்திலேயே கிடப்பவள். ஆனால் இந்தப் பாட்டி அப்படி இல்லை. இவள் நின்ற இடத்தில் நிற்காமல் இந்தத் தமிழ்நாடு முழுக்கச் சுற்றிக் கொண்டே இருந்தாள். ஒரு குக்கிராமம் பாக்கியில்லாமல் ஊர் ஊராக, தெருத் தெருவாக ஓடிக் கொண்டேயிருந்தாள். அந்தப் பாட்டிக்கு அப்படி ஒரு உற்சாக சக்தி இருந்தது. பாட்டி விஷயம் இப்படி இருக்கட்டும்.

குழந்தை ஒன்று. 'கஷ¨க் முஷ¨க்' என்று நல்ல ஆரோக்கிய மாக இருக்கிற குழந்தை அது. குழந்தை என்றால் பொதுவாக என்ன பண்ணும்? துள்ளி விளையாடும். ஒரு க்ஷணம்கூட இருந்த இடத்தில் இருக்காமல் 'துருதுரு' என்று ஓடிக் கொண்டேயிருக்கும். ஆனால் இந்தக் குழந்தை இதற்கு நேர்மாறாக உட்கார்ந்த இடத்தைவிட்டு அசைவதில்லை.

வேடிக்கையான பாட்டி, வேடிக்கையான குழந்தை! குழந்தை மாதிரிப் பாட்டி ஓடிக் கொண்டிருக்கிறாள். பாட்டி மாதிரிக் குழந்தை இருந்த இடத்தைவிட்டு நகராமல் உட்கார்ந் திருக்கிறது.

ஆனால் அந்தப் பாட்டி தள்ளாத வயசிலும் அத்தனை உற்சாகத்தோடு ஓடி ஆடிக் கொண்டிருந்ததற்கு இந்தக் குழந்தைதான் காரணம். இந்தக் குழந்தை கொடுத்த சக்தியி னால்தான் அவள் இவ்வளவு காரியம் செய்தாள்.

இந்தப் பிள்ளை யார்?

'பிள்ளை' என்றாலே அவர்தான். மரியாதையாகப் 'பிள்ளையார்' என்கிறோமே, அவர்தான் அந்தக் குழந்தை. யாராவது ஒருத்தர் இடத்தைவிட்டு நகராமல் இருந்தால் 'கல்லுப் பிள்ளையார் மாதிரி' என்று சொல்வது வழக்கம்!

சகல உலகங்களுக்கும் தாய் தந்தையான பார்வதி பரமேச்வரர்களின் மூத்த பிள்ளை அவர். அதனால்தான் தமிழ் நாட்டில் அவரைப் 'பிள்ளையார்' என்று சொல்கிறோம்.

மற்ற இடங்களில் இவரைக் கணேஷ் (கணேசர்), கணபதி என்பார்கள். சிவபெருமானின் படைகளுக்கு, பூத கணங்களுக்கெல்லாம் பிள்ளையார்தான் தலைவர், ஈசர், பதி. அதனால் கணேசர், கணபதி என்று பெயர். இவருக்கு மேலே தலைவர் யாரும் கிடையாது. எல்லாவற்றுக்கும் முந்தியவராக, முதல்வராக, மேலாக இருப்பவர் அவர். அவருக்கு மேலே இன்னொரு தலைவர் (நாயகர்) இல்லை. அதனால் 'விநாயகர்' என்றும் பெயர். 'வி' என்பது சில சமயங்களில் ஒன்றை உயர்த்திக் காட்டுவதற்கும், சில சமயங்களில் ஒன்றுக்கு எதிர்மறையானதைக் (opposite) குறிப்பிடவும் வார்த்தைக்கு முதலில் வரும். இங்கே 'நாயகன் இல்லாதவர்' என்றும் எதிர்மறையாக வருகிறது. தமக்குமேல் ஒரு நாயகன் இல்லாதவர் என்று அர்த்தம்.

அவர் செய்யாத அனுக்கிரஹம் இல்லை. குறிப்பாக, நமக்கு வருகிற விக்கினங்களை யெல்லாம் அழிக்கிறவர் அவர்தான். ஆகையால் 'விக்னேச்வரர்' என்றும் அவரைச் சொல்கிறோம். எந்தக் காரியத்துக்கும் தடை வராமல் இருப்பதற்காகவே முதலில் இவரைப் பிரார்த்திக்கிறோம். முதல் பூஜை இவருக்குத் தான்.

கஜமுகன், கஜராஜன் இப்படியெல்லாமும் அவருக்குப் பெயர் இருக்கிறது. யானை முகத்தோடு அவர் விளங்குவதால் இந்தப் பெயர்கள் வந்திருக்கின்றன.

யானைக்குத் தேகபலம் மிகவும் அதிகம். ஆனாலும் அது சிங்கம், புலிபோல் மற்ற பிராணிகளை ஹிம்சிப்பதில்லை.

பர்மா, மலையாளம் மாதிரி இடங்களில் ஜனங்களுக்காக யானைகள்தான் பெரியபெரிய காரியங்களைச் செய்கின்றன. பிள்ளையாரும் இப்படித்தான் ரொம்பச் சக்தி வாய்ந்தவர்; ஆனாலும் அதைக் காட்டிக் கெடுதல் செய்யாமல் நமக்கெல் லாம் நன்மையே செய்து கொண்டிருப்பார். யானைக்கு புத்திக் கூர்மை, ஞாபக சக்தி எல்லாம் மிக அதிகம். பிள்ளையார் அறிவே வடிவானவர்.

யானை என்ன செய்தாலும் அழகாயிருக்கிறது. அது அசக்கி அசக்கி நடப்பது, சாப்பிடுவது, காதை ஆட்டுவது, தும்பிக்கையைத் தூக்குவது—எல்லாமே பார்க்க ஆனந்தமாக இருக்கிறது. அதன் முகத்தைப் பார்த்தாலே பரம சாந்தமாக இருக்கிறது. சின்னக் கண்களானாலும், அமைதியாக, அன்பாக இருக்கின்றன. மிருக வர்க்கத்தில் நாம் பார்த்துக் கொண்டே இருப்பது யானையைத்தான்!

மனித வர்க்கத்தில் குழந்தை என்றால் அதைப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும்போல் தோன்றுகிறது. கெட்ட எண்ணமே இல்லாதது குழந்தை. ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருப்பது குழந்தை. அதைப் பார்த்தாலே நமக்கும் ஸந்தோஷமாக இருக்கிறது.

பிள்ளையார் யானைக்கு யானை; குழந்தைக்குக் குழந்தை. அதனால் அவரை எத்தனை பார்த்தாலும் போதும் என்று திருப்தி உண்டாவதில்லை. கள்ளம் கபடம் இல்லாத குழந்தை மனஸு அவருக்கு. குழந்தைபோல் நல்ல உள்ளம்; யானை மாதிரித் தேக பலம், புத்திக் கூர்மை; எல்லாவற்றுக்கும் மேலாக தெவிட்டாத அழகு; ஆனந்தம் பொங்கிக் கொண்டிருக்கிற ரூபம்.

சேராததெல்லாம் அவரிடம் ஸ்வபாவமாகச் சேருகிறது. கழுத்துக்குக் கீழே குழந்தை; மனித வர்க்கம். மேலே முகம் யானை; மிருக வர்க்கம். ஆனால் அவர் வாஸ்தவத்தில் தேவ வர்க்கம். தேவர்களுக்குள் முதல் பூஜை பெறும் தெய்வமாக இருக்கிறார்.

குழந்தையாக இருந்து கொண்டே மஹாப் பெரிய தத்வங்

களுக்கு ரூபமாக (personification) இருக்கிற பிள்ளையாரிடம் பல தினுசான மாறுபாடுகள் (contrasts). இதிலே ஓர் அழகு. வித்தியாசமானதெல்லாம் அவரிடம் சேர்ந்திருப்பதாலேயே அவரிடம் எல்லாம் ஐக்கியம் என்றாகிறது. உதாரணமாக, ஒரு கையில் ஒடிந்த தந்தம் என்றால், இன்னொரு கையிலே கொழுக்கட்டை வைத்திருக்கிறார். அதற்குள் தித்திப்பாக இருக்கிற வஸ்துவுக்குப் பெயர் பூர்ணம். பூர்ணம் என்றால் முழுமை. ஒரு கையில் இருக்கிற தந்தம் மூளி; இன்னொன்றிலோ முழுமை. எல்லாம் நிறைந்த பூரணப் பொருள் பிள்ளையாரே தான். இதை அறிந்து கொள்வதுதான் பேரானந்தம். ஆனந்தத்துக்கு இன்னொரு பேர் மோதம், மோதகம். கொழுக்கட்டைக்கும் மோதகம் என்றே பேர்.

இன்னொரு மாறுபாடு: பிள்ளையார் குழந்தை. அதனால் பிரம்மசாரி. ஆனால் இவர் யானையாக வந்து வள்ளியை விரட்டியதால்தான் அவள் ஸுப்ரமண்ய ஸ்வாமியைக் கல்யாணம் செய்து கொண்டாள்! இன்றைக்கும் கல்யாணம் ஆக வேண்டுமானால் இந்தக் கட்டைப் பிரம்மசாரியை வேண்டிக் கொள்கிறார்கள். இதற்கு என்ன அர்த்தம்? அவர் இருக்கிற நிலையில் அவருக்கு வேண்டாததையெல்லாம்கூட, அவர் நிலைக்கு மாறாக இருக்கிற நமக்குப் பரம கருணையோடு கொடுத்துக் கொஞ்சம் கொஞ்சமாகத் தூக்கி விடுகிறார்.

'கல்லுப் பிள்ளையார்' என்பதற்கேற்பத் தாம் உட்கார்ந்த இடத்தைவிட்டு அசையாமலே இருந்தாலும், பக்தர்களை ஒரே தூக்காகத் தூக்கி உச்சத்தில் சேர்த்து விடுவார். அவ்வையாரை இப்படித்தான் கடைசியில் ஒரே தூக்குத் தூக்கிக் கைலாஸத்திலேயே கொண்டு சேர்த்து விட்டார்!

பிள்ளையாரைப் பார்க்கப் பார்க்க நமக்கு மேலே மேலே இப்படிப் பல தத்துவம் தோன்றுகிறது. இதுவும் நம் அறிவின் அளவுக்கு எவ்வளவு எட்டுகிறதோ அவ்வளவுதான். வாஸ்தவத்தில் நமக்குத் தெரிவதற்கும் அதிகமாக, அவரிடம் பெருமைகள் அளவிட முடியாமல் இருக்கின்றன.

'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே' என்பார்கள். தெய்வமே குழந்தையாக வந்துவிட்டது –

பிள்ளையாரில். அதனால் அவரைக் குழந்தை ஸ்வாமியாகக் கொண்டாடுகின்ற தமிழ் நாட்டில், ஒரு மூலைமுடுக்கு பாக்கி இல்லாமல் எங்கு பார்த்தாலும் உட்கார்ந்து கொண்டு அனுக்கிரஹம் பண்ணிக் கொண்டிருக்கிறார்.

அவர் செய்த அனுக்கிரஹத்தினால்தான் அந்தப் பாட்டி தமிழ்நாடு முழுவதும் ஓடிக் கொண்டிருந்தாள்.

அந்தப் பாட்டி யார் என்றால், அவள்தான் அவ்வையார்.

பிள்ளையார்—அவ்வையார்!



## தமிழ்நாட்டின் சிறப்பு

அவ்வையாரைவிடத் தமிழ் நாட்டுக்கு உபகாரம் செய்தவர் இல்லை. ஆயிரம் காலமாக இந்தத் தேசத்தில் ஒழுக்கமும் பக்தியும் இருந்து வந்திருக்கிறதென்றால், அது முக்கியமாக அவ்வையாரால்தான்!

முளைக்கிறபோதே, குழந்தைகளாக இருக்கிறபோதே, நல்ல ஒழுக்கத்தையும், பக்தியையும், உண்டாக்கி விட்டால்தான் பிறகு அவை நிலைத்து நிற்கும். தமிழ் நாட்டில் எத்தனையோ மகாகவிகள், பக்தர்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் பாடியது முக்கியமாகப் பெரியவர்களுக்குத்தான். அவ்வையாருக்கு அவர்களைவிடக் கவிதா சக்தியோ, பக்தியோ குறைச்சல் இல்லை. அவள் ரொம்பப் பெரியவள்; ஞானி; யோக சாஸ்திரத்தில் கரை கண்டவள். ஆனாலும் அவள் குழந்தைகளை நல்லவர்களாக்க வேண்டும் என்பதில் முக்கியமாகக் கவனம் வைத்து, அவர்களுக்கு நல்ல குணங்களையும், ஒழுக்கத்தையும், நீதியையும், தெய்வ பக்தியையும் போதனை செய்து பாடினாள்.

பேரக் குழந்தைகள் நன்றாக இருக்க வேண்டுமே என்ற

கரிசனத்தோடு ஒரு பாட்டி நல்லது சொல்வது மாதிரி அவ்வைப் பாட்டி அத்தனை தமிழ்க் குழந்தைகளுக்கும் உபதேசம் செய்தாள். அவளுடைய அன்பின் விசேஷத்தால் அவளுக்கப்புறம் எத்தனையோ தலைமுறைகள் ஆனபிறகு, இப்போதும் நாம் குழந்தையாகப் படிக்க ஆரம்பிக்கிறபோதே, அவளுடைய 'ஆத்திசூடி'தான் முதலில் வருகிறது.

முதல் பூஜை பிள்ளையாருக்கு; முதல் படிப்பு அவ்வையார் பாடல்.

இத்தனை ஆயிரம் வருஷங்களாக அவளுடைய வார்த்தை எப்படி அழியாமல் தொடர்ந்து வருகிறது என்றால், அதற்குக் காரணம் அவளுடைய் வாக்கின் சக்திதான். பரம சத்தியமான ஒன்றை, நிறைந்த அன்போடு சொல்லி விட்டால், அப்படிப் பட்ட சொல் ஆயிரம் காலமானாலும் அழியாமல் நிற்கிறது. அவ்வை இப்படி அன்போடு உண்மைகளை உபதேசித்தாள். நம்மில் கம்பர், புகழேந்தி, இளங்கோ போன்ற கவிகளைப் படிக்காதவர்கள் இருக்கலாம்; ஆனால் அவ்வை வாக்கு ஒன்றா வது தெரியாதவர் இருக்க முடியாது!

அவ்வையாருக்கு இத்தனை வாக்குச் சக்தி எங்கேயிருந்து வந்தது? வாக்குச் சக்தி மட்டும் இல்லை; அவளுக்கு ரொம்ப வும் தேக சக்தியும் இருந்திருக்கிறது. அதனால்தான் 'ஐயோ, தமிழ்க் குழந்தை ஒன்றுக்குக்கூட நம் வாக்குக் கிடைக்காமல் போகக் கூடாதே! ஒவ்வொரு குழந்தைக்கும் நாம் இந்த உபதேசங்களைக் கொடுக்க வேண்டுமே!' என்று பரிவோடு அந்தப் பாட்டி ஒரு கிராமம் மிச்சம் இல்லாமல் ஓடி ஓடிப் போய், குழந்தைகளைத் தேடித் தேடி அவர்களுக்குத் தன் நூல் களைப் பரிந்து பரிந்து போதித்தாள். இந்தத் தேக சக்தி அவளுக்கு எப்படி வந்தது? பிள்ளையார்தான் அவளுக்கு இந்தச் சக்திகளையெல்லாம் கொடுத்தார்.

அவ்வையார், பெரிய பிள்ளையார் பக்தை. அந்தக் குழந்தை ஸ்வாமியை வேண்டிக் கொண்டுதான் அவள் சின்ன வயசிலேயே கிழவியாகி விட்டாள். ஏன் அப்படிச் செய்தாள்? வாலிபமாகவும், நடுத்தர வயதாகவும் இருந்தால் ஒருத்தனைக் கல்யாணம் செய்து கொண்டு குடித்தனம் நடத்த வேண்டியிருக்

கும். பக்திக்குக் குடும்ப வாழ்க்கை இடையூறு என்பதாலேயே, இடையூறுகளை எல்லாம் போக்கும் விக்னேச்வரரை வேண்டிக் கொண்டு கிழவியாகி விட்டாள்.

ஸுப்ரமண்ய ஸ்வாமிக்குக் கல்யாணமாக ஸஹாயம் பண்ணின பிள்ளையார், இவளைக் கல்யாணமேயில்லாத பாட்டி ஆக்கினார்! யாருக்கு எதைத் தர வேண்டுமோ அதைத் தருவார். இவளைச் சிறு பிராயத்திலேயே கிழவியாக்கி விட்டார். ஆனால் அவர் குழந்தை சுவாமி அல்லவா? அதனால், இவள் தன்னிடம் மட்டும் எப்போது பார்த்தாலும் பக்தியாக இருந்தால் போதாது, இவளால் எல்லாக் குழந்தை களும் நன்மை பெற வேண்டும் என்று நினைத்தார். ஒரு சின்னக் குடும்பம் வேண்டாம் என்று கிழவி ஆனவளை, அத்தனை குழந்தைகளையும் கொண்ட பெரிய தமிழ்நாட்டுக் குடும்பத்துக்கே உபதேசம் செய்கிற பாட்டியாக்கி விட்டார்!

அவளும் ஸந்தோஷமாக அந்தக் காரியத்தைச் செய்தாள். மாறி மாறிப் பிள்ளையாரைத் தியானித்துப் பூஜிப்பதும், குழந்தைகளுக்கெல்லாம் உபதேசம் பண்ணுவதுமாகத் தன் வாழ்க்கையைக் கழித்தாள்.

அந்தப் பாட்டி அன்றைக்குச் சுற்றினாள். இன்றைக்கு நானும் எத்தனையோ சுற்றியிருக்கிறேன். அவள் தமிழ் நாடு மட்டும் சுற்றினாள். நான் இன்னும் மலையாளம், தெலுங்கு தேசம், பெங்கால், ஹிந்துஸ்தானி தேசம் என்று பல இடங்கள் சுற்றியிருக்கிறேன். அங்கெல்லாம் நான் பார்க்காமல், இந்தத் தமிழ் நாட்டில் மட்டும் பார்க்கும் விசேஷம் என்னவென்றால், தமிழ்நாடு ஒன்றிலேயே இப்படிச் சந்து – பொந்து, மரத்தடி, ஆற்றங்கரை எங்கே பார்த்தாலும் ஒரு பிள்ளையார் உட்கார்ந் திருப்பதுதான்! தமிழ் நாட்டை விட்டுக் கொஞ்சம் தாண்டிப் போனால்கூட இப்படிக் காணோம்!

பிள்ளையார் தமக்குப் பெரிசாக ராஜகோபுரம், பிராகாரம் கட்டிக் கோயில் எழுப்ப வேண்டும் என்று நினைக்கவில்லை. சின்னதாக ஒரு சன்னிதி வைத்துவிட்டாலும் அவருக்குப் போதும். தகரக் கொட்டகை போட்டால்கூட அவருக்குத் திருப்திதான்! அதுகூட வேண்டாம்! ஒரு கட்டிடமும் கூரையும்

இல்லாமல் வானம் பார்க்க அரச மரத்தடியில் அவர் பாட்டுக்கு அமர்ந்து அனுக்கிரஹம் பண்ணிக் கொண்டிருப்பார். ஆற்றங்கரையில் எங்கே பார்த்தாலும் நன்றாக உட்கார்ந்து கொண்டு ஆனந்தமாக இருப்பார்.

இந்தத் தமிழ்த் தேசத்தில் மட்டும் ஏன் இந்த விசேஷம் என்று கேட்டால், அவ்வையாருடைய விசேஷம்தான் இது என்று தோன்றுகிறது. அவள் தமிழ் நாட்டில் ஓடாத இடமில்லை அல்லவா? அவள் போன இடத்திலெல்லாம் அவளுடைய இஷ்ட தெய்வமான பிள்ளையாரும் வந்து உட்கார்ந்து கொண்டு விட்டார்!

தமிழ் நாட்டின் சிறப்புகள் என்று புஸ்தகங்களில் எத்தனையோ விஷயங்கள் போடுகிறார்கள். ஆனால் எனக்குத் தெரிகிற பெரிய சிறப்பு, இங்கே எங்கு பார்த்தாலும் பிள்ளையார் கோயில் கொண்டிருக்கிறதுதான்!



## உலகுக்கெல்லாம் சொந்தமானவர்

பிள்ளையார் ஏழை எளியவர்களுக்கெல்லாம் ஸ்வாமி. மஞ்சள் பொடியிலும், களிமண்ணிலும், சாணியிலும்கூட எவரும் ஒரு பிள்ளையாரைப் பிடித்துப் பூஜை செய்துவிடலாம். அவர் எளிதில் ஸந்தோஷப்படுகிறவர். எங்கே, எப்படி, எதில் கூப்பிட்டாலும் உடனே வந்து அந்தக் கல்லோ, களிமண்ணோ அதற்குள்ளிருந்து கொண்டு அருள் செய்வார். அவரை வழிபட நிறைய சாஸ்திரம் படிக்க வேண்டும் என்பதில்லை. ஒன்றும் படிக்காதவனுக்கும், அவன் கூப்பிட்ட குரலுக்கு வந்து விடுவார்.

'மற்ற தேவதா விக்கிரஹங்களில் ஸாங்கோபாங்கமாகப் பிராணப் பிரதிஷ்டை என்று பண்ணி, அவற்றில் அந்தந்தத் தேவதைகளின் ஜீவ களையை உண்டாக்குவது போல் பிள்ளை

யாருக்குப் பண்ண வேண்டுமென்பதில்லை. பாவித்த மாத்திரத்தில் எந்த மூர்த்தியிலும் அவர் வந்து விடுகிறார்' என்று சொல்வதுண்டு.

மற்ற ஸ்வாமிகளைத் தரிசனம் செய்வது என்றால், நாம் அதற்காக ஒரு காலம் பார்த்து, குளித்து முழுகி, அர்ச்சனை சாமான்கள் வாங்கிக் கொண்டு கோயிலுக்குப் போக வேண்டியிருக்கிறது. கோயிலுக்குப் போனாலும் நேரே அந்த ஸ்வாமியிடம் போய்விட முடியாது. பிராகாரம் சுற்றிக் கொண்டு உள்ளே போக வேண்டும். அப்போதும்கூட ஸ்வாமிக்கு ரொம்பப் பக்கத்தில் போகக் கூடாது. கொஞ்சம் தள்ளித்தான் நிற்க வேண்டும். பிள்ளையார் இப்படி இல்லை. எந்தச் சமயமானாலும் சரி, நாம் ஆபீஸுக்கோ, ஸ்கூலுக்கோ, கடைக்கோ போய் வருகிறபோதுகூட, தெருவிலே தற்செயலாகத் தலையைத் தூக்கினால், அங்கே ஒரு முக்கில் பிள்ளையார் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்! அவரைப் பார்த்த மாத்திரத்தில் நாமாக நெற்றியில் குட்டிக் கொண்டு ஒரு தோப்புக் கரணம் போட்டுவிட்டு நடையைக் கட்டுகிறோம். இதிலேயே நமக்குச் சொல்லத் தெரியாத ஒரு நிம்மதி, ஸந்தோஷம் உண்டாகிறது.

அவருக்குக் கோயில் என்று இருப்பதே ஓர் அறைதான். அதனால் ஒரு பேதமும் இல்லாமல் யாரும் கிட்டே போய்த் தரிசிக்க முடிகிறது. எல்லோருக்கும் அவர் ஸ்வாதீனம்! பிராகாரங்கள் எல்லாம் தாண்டி உள்ளுக்குள்ளே உட்கார்ந்திருக்கிற ஸ்வாமிகளைவிட, இப்படி எங்கே பார்த்தாலும் நட்ட நடுவில் உட்கார்ந்திருக்கிற பிள்ளையார்தான் தப்பாமல் ஜனங்களை இழுத்துத் தோப்புக் கரணம் வாங்கிக் கொண்டு விடுகிறார்!

பிள்ளையார் வழிபாட்டுக்கென்றே சில அம்சங்கள் இருக்கின்றன. சிதறு தேங்காய் போடுவது, நெற்றியில் குட்டிக் கொள்வது, தோப்புக்கரணம் போடுவது ஆகியவை பிள்ளையார் ஒருவருக்கே உரியவை.

பிள்ளையார் சன்னிதியில், இரண்டு கைகளையும் மறித்து நெற்றிப் பொட்டில் குட்டிக் கொள்ள வேண்டும். இப்படியே

இரண்டு கைகளையும் மறித்துக் காதுகளைப் பிடித்துக் கொண்டு, முட்டிக்கால் தரையில் படுகிற மாதிரி தோப்புக் கரணம் போட வேண்டும். இவை எதற்கு என்றால்,

யோக சாஸ்திரம் என்று ஒன்று இருக்கிறது. அதிலே நம் நாடிகளில் ஏற்படுகிற சலனங்களால் எப்படி மனஸையும் நல்லதாக மாற்றிக் கொள்ளலாம் என்று வழி சொல்லியிருக் கிறது. நம் உடம்பைப் பல தினுசாக வளைத்துச் செய்கிற அப்பியாஸங்களால், சுவாஸத்தின் கதியில் உண்டாக்கிக் கொள் கிற மாறுதல்களால் நம் உள்ளம் உயர்வதற்கான வழி பொட் டில் குட்டிக் கொள்வது, தோப்புக்கரணம் போடுவது இவற் றால் நம் நாடிகளின் சலனம் மாறும்; மனஸில் தெய்விகமான மாறுதல்கள் உண்டாகும். நம்பிக்கையோடு செய்தால் பலன் தெரியும்.

குழந்தைகளுக்காக நீதி நூல்களைச் செய்த அவ்வையார் பெரியவர்களுக்குக்கூட எளிதில் புரியாத பெரிய யோக தத்துவங்களை வைத்துப் பிள்ளையார் மேலேயே ஒரு ஸ்தோத் திரம் செய்திருக்கிறாள். அதற்கு 'விநாயகர் அகவல்' என்று பெயர். அளவில் சின்னதுதான் அந்த அகவல் ஸ்தோத்திரம்.

பிள்ளையாரை நினைக்கிறபோது அவ்வையாரையும் நாம் சேர்த்து நினைத்தால் இரட்டிப்பு அனுக்கிரஹம் கிடைக்கும். 'விநாயகர் அகவலை'ச் சொன்னால் இரண்டு பேரையும் ஒரே சமயத்தில் நினைத்ததாகும். எல்லோரும் இதைச் செய்ய வேண்டும். வெள்ளிக் கிழமை தோறும் பக்கத்திலுள்ள பிள்ளை யார் கோயிலுக்குப் போய் 'விநாயகர் அகவல்' சொல்லி விக்னேச்வரனுக்கு அர்ப்பணம் பண்ண வேண்டும்.

பிள்ளையாருக்கு எல்லோரும் சொந்தம்; பிள்ளையார் எல்லோருக்கும் சொந்தம். ஏழை எளியவருக்கும், சாஸ்திரம் படிக்காத சாமானிய ஜனங்களுக்கும்கூடச் சொந்தம். மற்ற ஸ்வாமிகளின் நைவேத்திய விநியோகத்தில் பெரிய மனுஷ்யர் களுக்குத்தான் முதலிடம். பிள்ளையாரோ தமக்குப் போடுகிற சிதறுகாய் இவர்களுக்குப் போகாமல் ஏழைக் குழந்தைகளுக்கே போகும்படியாக வைத்துக் கொண்டிருக்கிறார்! எல்லோரும் 'அகவல்' சொல்லி அவரை வழிபட வேண்டும். பெண்களுக்

கும், குழந்தைகளுக்கும் இதில் அதிக உரிமை உண்டு. அவ்வை பெண்ணாகப் பிறந்ததால், பெண்கள் எல்லோருக்கும் அவளுடைய இந்த ஸ்தோத்திரத்தில் பாத்தியதை ஜாஸ்தி. அவள் குழந்தைகளுக்கு உபதேசித்த பாட்டி. விநாயகரும் குழந்தைத் தெய்வம். அதனால் அவளுடைய அகவலைக் குழந்தைகள் யாவரும் அவர் முன் பாடி ஸமர்ப்பிக்க வேண்டும். கொஞ்சம் 'கடமுட' என்றிருக்கிறதே, அர்த்தம் புரியவில்லையே என்று பார்க்க வேண்டாம். அர்த்தம் புரிந்தாலும், புரியாவிட்டாலும் 'அவ்வையின் வாக்குக்கே நன்மை செய்கிற சக்தி உண்டு' என்று நம்பி அகவலைப் பொட்டை நெட்டுருப் போட்டுச் சொன்னாலும் போதும்; அதனால் நாமும் க்ஷேமம் அடைவோம். நாடும் க்ஷேமம் அடையும்!

அழகான பெட்டி ஒன்று கிடைக்கிறது. அதற்குள் நிறைய ரத்தினங்கள் இருக்கின்றன. ஆனாலும் பெட்டியைத் திறக்கச் சாவியைக் காணோம். அதனால் பெட்டி வேண்டாம் என்று விட்டு விடுவோமா? 'சாவி கிடைக்கிறபோது கிடைக்கட்டும்' என்று பெட்டியை வைத்துக் கொள்வோம் அல்லவா? இப்போது பெட்டியை விட்டுவிட்டால் பிறகு சாவி கிடைத்தாலும் பிரயோஜனமில்லையே? 'விநாயகர் அகவல்' அப்படிப் பட்ட அழகான பெட்டி. அதற்குள்ளே யோக சாஸ்திர விஷயங்கள் ரத்தினம் மாதிரி உள்ளன. அவற்றைப் புரிந்து கொள்கிற புத்தி (சாவி) இப்போது நம்மிடம் இல்லா விட்டாலும் பரவாயில்லை. இப்போதே பிடித்து அதைச் சொல்லிக் கொண்டிருப்போம். சொல்லச் சொல்ல, தானே அர்த்தமும் புரிய ஆரம்பிக்கும். பிள்ளையாரே அது புரிவதற்கான அனுக்கிரஹத்தைச் செய்வார்.

பிள்ளையார் எல்லாருக்கும் நல்லவர்; எல்லாருக்கும் வேண்டியவர்; சொந்தம். சிவ சம்பந்தமான லிங்கம், அம்பாள், முருகன் முதலிய விக்கிரஹங்களைப் பெருமாள் கோயிலில் பார்க்க முடியாது. ஆனால், பிள்ளையாரும் சிவ குடும்பத்தைத் தான் சேர்ந்தவர். என்றாலும், விஷ்ணு ஆலயங்களில்கூடப் பிள்ளையார் மட்டும் இருப்பார். 'தும்பிக்கை ஆழ்வார்' என்று அவருக்குப் பெயர் சொல்லுவார்கள். மதச் சண்டைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவர் அவர்!

அதனால்தான் புத்தமதம், ஜைனமதம் எல்லாவற்றிலும் கூட அவரை வழிபடுகிறார்கள். தமிழ் நாட்டிலிருப்பது போல் மற்ற ராஜ்யங்களில் தடுக்கி விழுந்த இடமெல்லாம் விநாயகர் இல்லாவிட்டாலுங்கூட, பாரத தேசத்திலுள்ள அத்தனை ஸ்தலங்களிலும் ஓரிடத்திலாவது அவர் இருப்பார். 'கன்னியா குமரியிலும் பிள்ளையார்; ஹிமயத்தின் கோடியில் கேதாரத்தி லும் ஒரு பிள்ளையார்' என்று ஒரு கணபதி பக்தர் என்னிடம் பெருமைப்பட்டுக் கொண்டார்.

நம் தேசத்தில் மட்டும்தான் என்றில்லை. ஜப்பானிலிருந்து மெக்ஸிகோ வரை உலகத்தின் எல்லாத் தேசங்களிலும் விநாய கர் விக்கிரஹம் அகப்படுகிறது! லோகம் பூராவும் உள்ள ஸகல நாடுகளிலும் அவரைப் பல தினுசான மூர்த்திகளில் வழிபடு கிறார்கள்.

அப்படி லோகம் முழுவதற்கும் சொந்தமாக இருக்கப்பட்ட வரை நாம் எல்லோரும் தவறாமல் ஆராதிக்க வேண்டும். வசதி இருப்பவர்கள் அவருக்கு மோதகமும், மற்ற பக்ஷணமும், பழங் களும் நிறைய நிவேதனம் செய்து, குழந்தைகளுக்கு வினியோ கம் பண்ண வேண்டும். அவர் குழந்தையாக வந்த ஸ்வாமி. குழந்தை என்றால் அது கொழுகொழு என்று இருக்க வேண் டும். அதற்கு நிறைய ஆகாரம் கொடுக்க வேண்டும். பிள்ளை யாரின் தொப்பை வாடாமல் அவருக்கு நிறைய நிவேதனம் செய்ய வேண்டும். வெள்ளிக் கிழமை தோறும் அவருக்குச் சிதறுகாய் போட்டுக் குழந்தைகளை ஸந்தோஷப்படுத்த வேண் டும். பெரியவர்கள் இவ்வாறு மற்ற குழந்தைகளை மகிழ்வித் தால், ஈசன் குழந்தையான பிள்ளையாரும் மகிழ்ந்து, பெரிய வர்களையும் குழந்தைகளாக்கித் தம்மோடு விளையாடச் செய் வார்.

பெரியவர்களானால் துக்கமும், தொல்லையும்தான். குழந்தை ஸ்வாமியோடு சேர்ந்து இந்தத் துக்கத்தைத் தொலைத்து அவரைப்போல் ஆனந்தமாகிவிட வேண்டும். அவர் எப்போதும் சிரித்த முகமுள்ளவர். 'ஸுமுகர்', 'பிரஸன்ன வதனர்' என்ற பெயர் பெற்று எப்போதும் பேரானந்தத்தைப் பொங்க விடுபவர். நாம் உண்மையாகப் பக்தி செய்தால் நம்மையும் அப்படி ஆக்குவார்.

தமிழ் நாட்டின் பாக்கியமாகத் திரும்பிய இடமெல்லாம் அமர்ந்திருக்கும் அவரை நாம் எந்நாளும் மறக்கக் கூடாது. நாம் எல்லோரும் தவறாமல் பிள்ளையார் கோயிலுக்குப் போவது, தேங்காய் உடைப்பது, 'விநாயகர் அகவல்' சொல்வது என்று வைத்துக் கொண்டால் இப்போதிருக்கிற இத்தனை ஆயிரம் கோயிலுங்கூடப் போதாது; புதிதாகக் கட்ட வேண்டியிருக்கும்.

புதிதாகப் பிள்ளையார் கோயில் கட்டி மூர்த்திப் பிரதிஷ்டை செய்வதில் வேடிக்கையாக ஓர் உலக வழக்கு இருக்கிறது. அதாவது புதிதாகப் பிள்ளையார் விக்கிரகம் அடிக்கக் கொடுக்காமல், ஏற்கெனவே ஒரு கோயிலில் இருக்கிற பிள்ளையாரைத் திருடிக் கொண்டு வந்துதான் புதுக் கோயிலில் வைக்க வேண்டும் என்பார்கள். 'இது என்ன? சாதாரண விஷயங்களிலேயே திருட்டு கூடாது என்றால், தெய்வ காரியத்தில் போய்த் திருட்டுச் செய்யலாமா?' என்று தோன்றுகிறதல்லவா? பிள்ளையாரைத் திருடலாம் என்றால்தான், ஒவ்வொரு கோயிலைச் சேர்ந்தவர்களும், 'நம் பிள்ளையார் எங்கே திருட்டுப் போய் விடுவாரோ?' என்ற பயத்தால், அவரை அல்லும் பகலும் கவனித்துக் கொள்வார்கள். இப்போது பல ஊர்களிலிருந்தும் கவனக் குறைவால், 'ஸ்வாமியைக் காணோம்' என்று செய்தி வருகிற மாதிரி நடக்காமல் இருக்கும். அதற்காகவே இப்படி ஒரு திருட்டு வழக்கத்தைச் சொல்லி வருகிறார்கள் போலிருக்கிறது. பிள்ளையார் நினைப்பு நம் ஜனங்களுக்கு நீங்கவே கூடாது என்றுதான் இம்மாதிரியான ஏற்பாடுகளை நம் பெரியவர்கள் செய்து வைத்திருக்கிறார்கள். நமக்கு எப்போதும் துணை அவர்தான்.

நமக்கும், நாட்டுக்கும், உலகுக்கும் எல்லா க்ஷேமங்களும் உண்டாவதற்கு அவ்வையார் மூலம் பிள்ளையாரைப் பிடிப்பதே வழி!

# குரு



## நம்மை நாமாக்குகிறவர்

ராஜா ஒருத்தன் என்றிருந்தால் சத்ரு ராஜா, யுத்தம் எல்லாமும் இருக்கத்தானே செய்யும்? இந்த ராஜாவை எதிர்த்து எதிரி ராஜா வந்தான். இவனுடைய துரதிருஷ்டம், யுத்தத்தில் இவன் தோற்றுப் போனான்.

'வெற்றி; இல்லாவிட்டால் 'வீர ஸ்வர்க்கம்!' என்று சில ராஜாக்கள் யுத்த பூமியிலேயே உயிரை விட்டுவிடுவார்கள். இன்னும் சில ராஜாக்கள் தோற்றுப் போனால் ஓடி ஒதுங்கிப் பதுங்கிக் கொள்வார்கள். இவர்கள் எல்லோருமே வீரத்திலோ மானத்திலோ குறைந்தவர்கள் என்று அர்த்தம் இல்லை. பாய்கிற புலி பதுங்கும் என்கிற மாதிரி, இவர்கள் பதுங்குவது பிற்பாடு படையெடுத்துப் பழி வாங்குவதற்காகத்தான். மகாசூரர்களும், மானஸ்தர்களுமான ராஜபுத்ர ராஜாக்கள் கூட, இப்படி முஸ்லீம்களின் படையெடுப்பின்போது ஓடிப் போய், பிறகு பெரிய சைனியம் திரட்டிக் கொண்டு வந்து சண்டை போட்டிருக்கிறார்கள்.

என் 'கதை-ராஜா'வும் தோற்றுப் போனவுடன் பிராண ஹத்தி பண்ணிக் கொள்ளாமல் ஓடிப் போய்விட்டான்.

அவன் மட்டுமாக ஓடவில்லை.

அவனது பத்தினியையும் குதிரை மேல் வைத்துக் கொண்டு ஓடினான்.

அப்போது அவள் நிறை கர்ப்பிணி.

இந்த நாளில் 'அண்டர் க்ரவுண்ட்'டாகப் போவது என்ற மாதிரி அப்போதும் உண்டு. இந்த ராஜாவுக்கு ரொம்பவும் அபிமானமுள்ள மந்திரி இப்படித்தான் தலைமறைவாகி விட்டான். ராஜாவும் ராணியும் தப்பித்து ஒடியது அவனுக்கு மட்டும் அப்போதே தெரியும்.

ராஜாவின் குதிரை வனப் பிரதேசத்தில் போய்க் கொண்டிருந்தது.

அவனைத் தேடிப் பிடித்து வர, சத்ரு ராஜா நாலா பக்கமும் குதிரைப் படையை அனுப்பியிருந்தான்.

அவர்களில் சிலர் இந்தக் காட்டுக்கே வந்து விட்டார்கள். ராஜா போவதைத் தூரத்தில் பார்த்து அவனைப் பின் தொடர்ந்து துரத்தி வந்தார்கள்.

இவனைத் துரதிருஷ்டமும் துரத்திக் கொண்டு வந்தது. சத்ருக்கள் கிட்டே கிட்டே வந்து விட்டார்கள்.

பக்கத்திலே ஒரு வேடன் குடிசை இருந்தது. அதைப் பார்த்ததும் ராஜாவுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. குதிரையை நிறுத்தி, அதிலிருந்து இறங்கினான். ராணியையும் இறக்கினான்.

சத்ருக்கள் என்னை விடமாட்டார்கள். அவர்கள் ஏராளமான பேர் இருப்பதால் நான் எதிர்த்து எதுவும் பண்ணுவதற்கில்லை. என் முடிவு நிச்சயம். ஆனால் என்னோடு நீயும் போய் விடக் கூடாது. ஏன் சொல்கிறேன் என்றால், என்னால் பழி வாங்க முடியா விட்டாலும், இப்போது நீ கர்ப்பவதியாக இருக்கிறாயல்லவா? உனக்கு நம் குலம் விளங்க ஒரு புத்திரன் பிறந்தாலும் பிறக்கலாம்; பிறக்கப் போகிற பிள்ளையாவது சத்ருவை ஜயித்து ராஜ்யத்தை மறுபடியும் நம் பரம்பரையின் கைக்குக் கொண்டு வர வேண்டும். ஆகையால் நீ பதிவிரதை என்பதற்காக என்னோடு செத்துப் போவதைவிட, என் மனோரதத்தைப் பூர்த்தி பண்ணுவதற்காகவே உயிரோடிருந்து பிள்ளையைப் பெற்று வளர்க்க வேண்டும். இந்த வேடன் குடிசையில் அடைக்கலம் புகுந்து பிழைத்துக் கொள்' என்று ராணியிடம் ராஜா சொன்னான்.

அவளுக்கு அது தாங்க முடியாத கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனாலும் ராஜ தர்மம் என்று ஒன்று. அதற்கென்றே மானம், கௌரவம் என்றெல்லாம் இருந்ததால், பதியின் வார்த்

தையை அவளால் தட்ட முடியவில்லை. 'புருஷன் சொல்வது தானே நமக்கு வேதம்? அவன் சா என்றால் செத்துப்போகத் தயாராக இருக்கிற மாதிரியே, செத்துப் போவதுதான் ஸந்தோஷம் என்கிற ஸ்திதியில் அவன், 'சாகாதே. நீ உயிரோடுதான் இருக்க வேண்டும்' என்றால் அதையும் நாம் கேட்டுத்தானாக வேண்டும்' என்று தன்னைத் தானே ஒரு மாதிரி தேற்றிக் கொண்டு குடிசைக்குள் போய் மறைந்து கொண்டு விட்டாள்.

சத்ரு வீரர்கள் வந்து ராஜாவைப் பிடித்துக் கொண்டார்கள்.

அவன் கதை அதோடு முடிந்தது.

அவர்களுக்கு ராணியையும் இவன்கூட அழைத்து வந்தது தெரியாது. 'தனக்கு என்ன ஆபத்து வந்தாலும் வரட்டும்; அவளுக்கு வரக்கூடாது' என்றுதான் இவன் குதிரையில் அவளை முன்னே உட்கார வைத்து மறைத்துக் கொண்டு ஓட்டினான். பின்னாலிருந்து வந்த எதிரிகளுக்குக் குதிரைமேல் இவனுக்கு முன்னால் அவள் உட்கார்ந்திருந்தது தெரியவில்லை.

அதனால் ராணியைத் தேடிப் பார்க்காமலே அவர்கள், வந்த காரியம் முடிந்தது என்று ஸந்தோஷமாகப் போய் விட்டார்கள்.

வேடன் குடிசையில் வேடனின் அம்மாக் கிழவி இருந்தாள். பூர்ண கர்ப்பிணியாகத் தஞ்சம் என்று வந்த ராணியை மனஸாற வரவேற்று வைத்துக் கொண்டாள்.

படித்தவர்கள், நாகரிகக்காரர்கள் என்கிற நம்மைவிட, பாமரமான ஏழை ஜனங்களிடம் உபகாரம் செய்கிற ஸ்வபாவம், விஸ்வாஸப் பண்பு எல்லாம் எக்காலத்திலும் ஜாஸ்திதான்.

ராஜ ஸ்திரியை, வேட ஸ்திரீ தன் வயிற்றில் பிறந்த மகளைப் போல் வைத்துப் பராமரித்தாள்.

ராணி வயிற்றில் ஒரு பிள்ளை பிறந்தது.

அதோடு தன் கடமை ஆகிவிட்டது என்கிற மாதிரி, பிரஸவத்திலேயே ராணி மரணம் அடைந்து விட்டாள்.

பத்துப் பன்னிரண்டு வருஷங்கள் ஆகிவிட்டது.

சத்ரு ராஜாவே பரிபாலனம் பண்ணிக் கொண்டிருந்தான்.

ஆனாலும் ஜனங்களுக்கு அதில் திருப்தியில்லை. ஒரு ராஜ்யம் தோற்றுப் போனால்கூட ஜனங்களுக்குத் தங்கள் பழைய பாரம்பரிய ராஜா இல்லையே என்ற தாபம் இருந்து கொண்டேதான் இருக்கும்.

இந்தக் 'கதை-ராஜ்ய'த்திலிருந்த ஜனங்களுக்கு ராஜாவோடு ராணியும் தப்பித்துப் போனதோ, காட்டிலே அவளுக்குக் குழந்தை பிறந்ததோ தெரியாது. அதனால் தங்கள் கஷ்டத்தை யெல்லாம் அடக்கிக் கொண்டு பொறுமையோடு இருந்தார் கள்.

மந்திரிக்கு மட்டும் ராஜ தம்பதி இரண்டு பேருமே தப்பி ஓடியது தெரியுமல்லவா? அதனால் அவன் யோசித்தான். 'ஈச்வர கிருபையில் ராணிக்குப் பிள்ளைக் குழந்தையாகவே பிறந்திருந்து, அது இப்போது எங்கேனும் வளர்ந்து வந்தால் பன்னிரண்டு வயசு இருக்கும் அல்லவா? பாரம்பரியமான யுவராஜா என்றால் சைன்யத்தை நடத்தி யுத்தம் பண்ணவும், மந்திரிகளின் ஆலோசனையோடு ராஜ்ய பாரம் பண்ணவும் பன்னிரண்டு வயசு போதுமே! அதனால், ராஜகுமாரன் கிடைக்கிறானா என்று தேடிக் கண்டு பிடித்து அவனைக் கொஞ்சம் தனுர்வேதத்தில் (போர்ப் பயிற்சியில்) தேற்றிவிட் டால் ஜனங்கள் ஒரு மனஸாக அவன் கீழ் சேர்ந்து சத்ரு ராஜாவை அப்புறப்படுத்துவார்களே!' என்று நினைத்தான்.

ரகசியமாகக் கோஷ்டி சேர்த்து, அவன் பழைய ராஜாவின் சந்ததி இருக்கிறதா என்று தேடினான்.

வேடனின் குடிசைக்கு வந்து சேர்ந்தான்.

அங்கே அனேக வேடப் பசங்களோடு ராஜாவின் பிள்ளை யும் ஒரு கோவணத்தைக் கட்டிக் கொண்டு, தலையை முடிந்து இறக்கை சொருகிக் கொண்டு, குந்துமணி மாலையும் புலிநக மும் போட்டுக் கொண்டு அணில் குத்தி விளையாடிக் கொண் டிருந்தான். ஆனாலும் வம்சவாரியான ராஜகளை, பழைய ராஜாவின் ஜாடையெல்லாம் அவனுக்கு இருந்ததால், புத்தி சாலியான மந்திரிக்கு ஊகமாகப் புரிந்தது.

அந்தக் கிழவி இப்போதும் உயிரோடு இருந்தாள்.

அவளிடம் கேட்டான்.

காட்டு ஜனங்களுக்குச் சூது, வாது, பொய், புரட்டு தெரி யாது. அதனால் அவள் உள்ளபடி சொன்னாள். "ரொம்ப வருஷம் முந்தி ஒரு கர்ப்பிணி இங்கே வந்து அடைக்கலம் கேட் டாள். அவளை நான் என் மகள் மாதிரி வளர்த்தேன். ஆனா லும் அவள், தான் யார், என்ன என்று சொல்லிக்கொள்ளா மலே இந்தப் பிள்ளையைப் பெற்றுப் போட்டுவிட்டுக் கண்ணை மூடிக் கொண்டு போய்விட்டாள். அதற்கப்புறம்

இந்தப் பிள்ளைக்கு நானே அம்மாவாக இருந்து வளர்த்து வருகிறேன். ராஜ குடும்பம் மாதிரியான பெரிய இடத்து வாரிசு என்று ஊகிக்க முடிந்தாலும் இன்னார் என்று எங்க ளுக்கு நிச்சயமாகத் தெரியாது. எங்களில் ஒருத்தனாக எங்க ளோடேயே வைத்துப் பராமரித்துக் கொண்டிருக்கிறோம்'' என்றாள்.

மந்திரிக்கு உடனே இரண்டும் இரண்டும் நாலு என்கிற மாதிரி, 'நம் ராஜகுமாரன்தான் இங்கே வளர்வது' என்று புரிந்து விட்டது.

அதை அவன் சொல்லி, பிள்ளையை அழைத்துப் போக முன் வந்தவுடன், கிழவி, வேடன் எல்லோருக்கும் ரொம்பவும் கஷ்டமாகி விட்டது. வளர்த்த பாசம்! ஆனானப்பட்ட கண்வ மஹரிஷி, ஜட பரதர் மாதிரியானவர்களையே வளர்த்த பாசம் ஆட்டி வைத்திருக்கிறதே! ஆனாலும் ராஜ்ய காரியம் என்ப தால், இந்த வேடர்கள் தியாக புத்தியோடு ஏற்றுக் கொண்டார் கள்.

ஆனால் வேடப் பிள்ளைகளோடு விளையாடிக் கொண் டிருந்த ராஜகுமாரனை மந்திரி கூப்பிட்டதும், அவன் விழுந் தடித்துக் கொண்டு ஓடப் பார்த்தான். அவனுக்கு வேட சகவா சம்தான் பிடித்ததே தவிர, இந்தப் பெரிய மனுஷ்ய சம்பந்தம் பிடிக்கவே யில்லை.

வேடப் பிள்ளை மாதிரியே, ''இவங்கள்ளாந்தான் என் ஜாதி ஜனங்க, இவங்களைவிட்டு வர மாட்டேன்'' என்று ஓடி னான்.

அப்புறம் அவனைப் பிடித்து வந்து மந்திரி அவனுக்கு வாஸ்தவத்தையெல்லாம் விளக்கிச் சொன்னான். ''நீ ராஜகுமா ரன். நீ பிறக்கும் முன்பே, சத்ருக்களிடமிருந்து தப்பி இங்கே ஓடி வந்த உன் தகப்பனார் கொல்லப்பட்டார். அதற்கப்புறம் வேடர் குடிசையில் உன்னைப் பிரஸவித்துவிட்டு உன் அம்மா வும் போய்விட்டாள். அதிலிருந்து நீ இங்கே வளர்ந்து வருகி றாய். ஆனாலும் நீ ராஜ்யத்தையெல்லாம் ஆள வேண்டியவன். உன்னைத் தலைவனாக வைத்துக் கொண்டுதான் நாங்கள் அதைச் சத்ருவிடமிருந்து மீண்டும் ஜயிக்க ஆலோசனை செய்திருக்கிறோம். இப்போது நீ இருப்பதைவிடக் கோடி மடங்கு உயர்ந்த ஸ்திதியில் இருக்க வேண்டியவன். 'மாட் டேன்' என்று சொல்லலாமா?'' என்று எடுத்துச் சொல்லி விளக்

கினான்.

அந்தப் பிள்ளைக்கு வீரம், பித்ரு பாசம், அதற்காக எதிர் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்ற ஆர்வம் எல்லாவற்றை யும் ஊட்டி விட்டான்.

தான் ராஜகுமாரன் என்று தெரிந்தவுடனேயே, அந்தப் பிள்ளைக்கு ரொம்பச் சக்தி, தேஜஸ், காம்பீர்யம் எல்லாம் உண்டாகி விட்டது.

அப்புறம் அவனுக்கு அஸ்திர, சஸ்திர அப்பியாஸம் கொஞ் சம் சொல்லிக் கொடுத்தவுடனேயே அவற்றை நன்றாகப் பிடித் துக் கொண்டான்.

வேட ஜனங்களை விட்டுப் போனான். மந்திரியின் சகாயத் துடன் நாட்டில் சைனியம் திரட்டினான். ராஜ விஸ்வாஸம் கொண்ட ஜனங்கள், தங்கள் பழைய பாரம்பரிய வாரிசு வந்தி ருக்கிறான் என்றவுடன் உத்ஸாகமாக அவன் கீழ் ஒன்று சேர்ந் தார்கள்.

இப்போதெல்லாம் குடியரசு யுகத்தில் ஒருத்தரைத் தலைவர் என்று ஸ்தோத்திரம் பண்ணி ஊரையெல்லாம் இரண்டு படுத் துகிற மாதிரி டெமான்ஸ்ட்ரேஷன்கள் பண்ணிவிட்டு, கொஞ்ச காலமானால் அவரை எவரும் சீந்தாமல் தூக்கிப் போடுகிற மாதிரி இல்லை, ராஜ விஸ்வாஸம் என்பது. அது நின்று நிலைத்து ஹ்ருதய பூர்வமாக இருந்து வந்த விஷயம். ராஜாக் களும் இந்த விஸ்வாஸத்தைப் பெறுவதற்குப் பாத்திரர்களா கவே ரொம்பவும் ஒழுக்கத்தோடு குடிஜனங்களைத் தாம் பெற்ற குழந்தைகளைப் போலப் பரிபாலனம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று அதிகாரம் வந்து, அந்த ருசியில் கண்டது காணாததுபோல் ஒழுங்கு தப்பிப் போகிற மாதிரி இல்லை, பாரம்பரிய ராஜ்யாதிகாரம் என்பது. இந்தக் கதையில் வரும் பையன் மாதிரித் திடீர் அதிகாரம் வந்தால்கூட பாரம்பரியப் பண்பு அவர்கள் தலைதெறிக்கப் போகாமலே கட்டுப்படுத்தும். புராணங்களைப் பார்த்தால் வேனனையும் அஸமஞ்ஜனையும் போல் எங்கேயாவது நூற்றிலே ஒரு ராஜாவோ ராஜகுமாரனோ முறை தப்பிப் போனால் அப்போது ஜனங்களே அவனைத் தொலைத்து முழுகியிருக் கிறார்கள். மொத்தத்தில் 'யதா ராஜா ததா ப்ரஜா' (அரசன் எவ்வழி; மக்கள் அவ்வழி) என்ற மாதிரி, அப்போது இரண்டு பக்கத்திலும் தர்மத்துக்குப் பயந்தவர்களாக இருந்தார்கள்.

சட்டம் என்று வெறும் ராஜாங்க ரீதியில் போடுகிறபோது, முதலில் அதைப் பண்ணுகிறவர்கள் சரியாக இருக்கிறார்களா என்ற கேள்வி வருகிறது. இந்தச் சட்டங்களுக்கெல்லாம் மேலான த்ரிலோக ராஜாவான பரமேச்வரனின் சட்டமான தர்ம சாஸ்திரத்துக்கு அடங்கியே ஆளுகிறவர்கள், ஆளப்படுகிறவர்கள் ஆகிய இருவரும் இருந்தால்தான் லோகம் நன்றாயிருக்கும். பூர்வ காலங்களில் ஆளப்படுகிறவர்களும் ஆளுகிறவர்களுமே இப்படி தர்மத்துக்கு அடங்கியிருந்து வழி காட்டியிருக்கிறார்கள். இதனால்தான் ஜனங்களுக்கு ஸ்வபாவமாக, ராஜ விஸ்வாஸம் என்ற ஆழ்ந்த, நிஜமான பற்று இருந்து வந்திருக்கிறது. 'இவர்கள் தன் ஜனங்கள்' என்ற பாந்தவ்யம் ராஜாவுக்கும், 'இவன் 'நம்ராஜா' என்ற அன்பு ஜனங்களுக்கும் இருந்து வந்தது.

கதையில் சொன்ன பையன், சத்ருவை ஜயிக்க மந்திரியின் ஏற்பாட்டில் ஆயத்தம் பண்ணுகிறான் என்றவுடன், ஜனங்களெல்லாம் அவன் கட்சியில் சேர்ந்து யுத்தத்துக்குக் கிளம்பிவிட்டார்கள்.

சுலபத்தில் சத்ருவை ஜயித்தும் விட்டார்கள்.

பையனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணி ராஜா ஆக்கினார்கள்.

அவனுக்குத் தான் வேடனாக இருந்த எண்ணமே அடியோடு மறந்து போய்விட்டது. பூர்ண ராஜாவாகவே இருந்தான்.

இந்தக் கதையை நான் சொல்லவில்லை. பெரிய ஆசார்யர் ஒருத்தர், அத்வைத ஸம்பிரதாயத்தின் ஆதிகாலப் பிரவர்த்தகர்களில் ஒருத்தர் சொல்லியிருக்கிறார். குரு தத்வத்தைச் சொல்லும்போது இப்படிக் கதை சொல்லியிருக்கிறார். நான் கொஞ்சம் காது, மூக்கு வைத்தேன்.

**அடுத்த புத்தகத்தில்...**

குரு என்கிற தலைப்பின் கீழ் கட்டுரைகள் தொடர்கின்றன.




துவாரகை — கிருஷ்ணன் கோயில்